# நன்னூல்-மூலம்.



இ[illegible],

இராமாநுசகவிராயரவர்களால்

திருத்தப்பட்டு அவரது அச்சுக்

கூடத்திற்பதிப்பித்தது.

இதன் விலை - அணா - அ.

இதற்கு

இராமாநுசகாண்டிகை யெனச்சிறப்புப்பெயர்தந்த விருத்தியுரையும் அவராற் செய்யப்பட்டு மேற்படி அச்சுக்கூடத் திற்பதிப்பிக்கப்படுகின்றது.

இங்கே

காண்டிகையென்றது, விருத்தியுரைக்கு அங்கமாகலாற் சினையாகு பெயரெனக்காண்க. (சினை-அவயவம்,) ஆகுபெயர் ஒன்றின்பெயரை மற்றொன்றிற்குஇட்டு வழங்கப்படுவது.

{ ௲அ௱சஎ ௵
செப்டம்பர் ௴ }

1847



இது,

நன்னூல்.

மூலபாடம்.

# சிறப்புப்பாயிரம்.



மலர்தலையுலகின் மல்கிருளகல, விலகொளி பரப்பியாவையும்விளக்கும்,பரிதியினொருதா னாகிமுதலீ, றொப்பளவாசை முனிவிகந்துயர்ந்த, வற்புதமூர்த்திதன்னலர்தரு தன்மையின், மனவிருளிரியமாண்பொருண்முழுவது, முனிவறவருளியமூவறுமொழியுளுங், குணகடல் குமரிகுடகம் வேங்கட, மெனுநான் கெல்லையினிருந்தமிழ்க்கடலு, ளரும்பொருளைந்தையும்யாவருமுணரத்,தொகை வகைவிரியிற்றருகெனத்துன்னா, ரிகலறநூறியிருநிலமுழுவதுந்,தனதெனக்கோலித்தன்மதவாரணந்,திசைதொறுநிறுவியதிறலுறுதொல்சீர்க், கருங்கழல்வெண்குடைக்கார்நிகர்வண்கைத், திருந்திய செங்கோற்சீயகங்க, னருங்கலை விநோத

ணமராபரணன், மொழிந்தனனுகமுன்னோர் நூலின், வழியே நன்னூற்பெயரின்வகுத்தன ன், பொன்மதிற் சனகைச் சன்மதி முனியரு ள், பன்னருஞ்சிறப்பிற்பவணந்தி, யென்னு நாமத் திருந்தவத்தோனே. - - *

பொதுப்பாயிரம்.

முகவுரைபதிகமணிந் துரை நூன்முகம், பு றவுரை தந் துரைபுனந் துரைபாயிரம். (க)

பாயிரம் பொதுச் சிறப்பென விருபாற் றே. (உ)

நூலே நுவல்வோனுவ னுந்திறனே, கொள் வோன்கோடற் கூற்றுமைந் து, மெல்லா நூற் குமிவைபொதுப்பாயிரம். (ந)

நூலினியல்பே நுவலினோரிரு, பாயிரந்தோ ற்றிமும்மையினொன்றாய், நாற்பொருட்பய த்தோடெழுமதந்தழுவி, யையிருகுற்றமுமக ற்றியம்மாட்சியோ, டெண்ணான் குத்தியினோ த் துப்படல, மென்னுமுறுப்பினிற்சூத்திரங்கா ண்டிகை, விருத்தியாகும்விகற்பநடைபெ றுமே. - - - - - - - - (ச)

முதல்வழிசார்பென நூன்மூன்றாகும். (ரு)

அவற்றுள், வினையினீங்கிவிளங்கியவறிவின், முனைவன்கண்டதுமுதனூலாகும். (௫)

முன்னோர் நூலின் முடிபொருங்கொத்துப், பின்னோன்வேண்டும் விகற்பங்கூறி, யழியாமரபினது வழிநூலாகும். (௭)

இருவர் நூற்குமொருசிறைதொடங்கித், திரிபுவேறுடையது புடை நூலாகும். (௮)

முன்னோர் மொழி பொருளே யன்றியவர் மொழியும், பொன்னேபோற்போற்றுவமென்பதற்கு,முன் னோரின், வேறு நூல்செய்துமெனுமேற்கோளில்லென்பதற்குங், கூறுபழஞ்சூத்திர த்தின்கோள். (௯)

அறம் பொருளின்பம் வீடடைதனூற்பயனே. (௰)

எழுவகைமதமேயுடன்படன்மறுத்தல், பிறர்தம்மதமேற்கொண்டுகளைவே, தாஅனுட்டித்ததுநிறுப்பே, யிருவர்மாறுகோளொருதலை துணிவே, பிறநூற்குற்றங்காட்டலேனைப், பிறிதொடுபடாஅன்றன்மதங்கொளலே. (௰௧)

குன்றக்கூறன் மிகைபடக்கூறல், கூறியதுகூறன் மாறுகொளக்கூறல், வழூஉச்சொற்பு

ணர்த்தன் மயங்கவைத்தல், வெற்றெனத்தொ டுத்தன்மற்றொன் றுவிரித்தல், சென்றுதேய்ந் திறு தனின்றுபயனின்மை, யென்றிவையீரை ங்குற்ற நூற்கே. (௰௨)

சுருங்கச்சொல்லல்விளங்கவைத்த, னவின் றோர்க்கினிமைநன்மொழிபுணர்த்த, லோசை யுடைமையாழமுடைத்தாதன், முறையின்வை ப்பேயுலக மலையாமை, விழுமியது பயத்தல் விளங் குதாரணத்த, தாகுதனூ லிற்கழகெனு ம்பத்தே. (௰௩)

நுதலிப்புகுதலோத்து முறைவைப்பே, தொகுத்துச்சுட்டல்வகுத்துக் காட்டன், மு டித்துக்காட்டன்முடிவிடங்கூற, றானெடுத்து மொழிதல்பிறன்கோட்கூறல், சொற்பொருள் விரித்தறொடர்சொற்புணர்த்த, லிரட்டுறமொ ழித லேதுவின் முடித்த, லொப்பின் முடித்த ன்மாட்டெறிந்தொழுக, லிறந்ததுவிலக்கலெ திரதுபோற்றன், முன்மொழிந்துகோடல் பி ன்னது நிறுத்தல், விகற்பத்தின் முடித்தன்மு டிந்ததுமுடித்த, லுரைத்துமென்றலுரைத்தா மென்ற, லொருதலைதுணிதலெடுத்துக்காட்ட,

லெடுத்தமொழியி னெய்தவைத்த, லின்னதல்லதிதுவெனமொழித, லெஞ்சியசொல்லினெய்தக்கூறல், பிறநூன்முடிந்த துதானுடன்படுத, றன்குறிவழக்கமிகவெடுத்துரைத்தல், சொல்லின்முடிவி னப்பொருண்முடித்த, லொன்றி னமுடித்த றன்னின் முடித்த,லுய்த்துணர்வைப்பெனவுத்தியெண்ணான்கே. (௧௪)

நூற்பொருள்வழக்கொடுவாய்ப்பக்காட்டி, யேற்புழிய றிந்திதற் கிவ்வகையாமெனத், தகும்வகைசெலுத்து தறந்திரவுத்தி. (௧௫)

நேரினமணியை நிரல்படவைத்தாங், கோரினப் பொருளை யொருவழிவைப்ப, தோத்தெனமொழிப்பவுயர்மொழிப்புலவர். (௧௬)

ஒருநெறியின்றிவிரவியபொருளாற், பொதுமொழிதொடரி னதுபடலமாகும். (௧௭)

சில்வகையெழுத்திற் பல்வகைப் பொருளைச், செவ்வனாடியிற் செறித்தினிதுவிளக்கித், திட்பநுட்பஞ் சிறந்தன சூத்திரம். (௧௮)

ஆற்றொழுக்கரிமா நோக்கந்தவளைப், பாய்த்துப்பருந்தின்வீழ்வன்னசூத்திரநிலை. (௧௯)

பிண்டந்தொகைவகை குறியே செய்கை,

கொண்டியல் புறனடைக்கூற்றனசூத்திரம்.
பாடங்கருத்தே சொல்வகை சொற்பொரு, டொகுத்துரையுதாரணம் வினாவிடைவிசேடம், விரிவதிகாரந் துணிவுபயனோ, டாசிரியவசனமென் றீரேழுரையே. - - - - (உக)
கருத்துப்பதப்பொருள் காட்டுமூன்றினு, மவற்றொடுவினாவிடையாக்கலானுஞ், சூத்திரத்துட்பொருடோற்றுவகாண்டிகை. (உஉ)
சூத்திரத்துட்பொருளன்றியுமாணடைக்,கின்றியமையாதியாவையும்விளங்கத், தன்னுரையானும் பிறநூலானு, மையமகலவைங்காண்டிகையுறுப்பொடு, மெய்யினையெஞ்சாதிசைப்பதுவிருத்தி. - - - - - (உ௩)

வெண்பா.

பஞ்சிதன்சொல்லாப்பனுவலிழையாகச்
செஞ்சொற்புலவனேசேயிழையா,வெஞ்சா,த
கைபேவாயாகக்கதிரோமதியாக
மையிலாநூன்முடியுமாறு. - - (உ௪)
உரத்தின்வளம்பெருக்கி யுள்ளியதீமைப்,
புரத்தின்வளமுருக்கிப்பொல்லா,மரத்தின்,
கனக்கோட்டந்தீர்க்குநூலஃதேபோன்மா

ந்தர்,] மனக்கோட்டந் தீர்க்குநூன்மாண்பு.

குலனருடெய்வங்கொள்கைமேன்மை, கலைப
யிறெளிவுகட்டுரைவன்மை, நிலமலைநிறைகோ
ன்மலர் நிகர்மாட்சியு, முலகியலறிவோடுயர்கு
ணமினையவு,மமைபவனூலுரையாசிரியன்னே

தெரிவரும்பெருமையுந் திண்மையும்பொ
றையும், பருவமுயற்சியளவிற்பயத்தலு, மரு
விய நன்னிலமாண்பாகும்மே. (உஎ)

அளக்கலாகாவளவும்பொருளுந், துளக்கலா
கா நிலையுந்தோற்றமும், வறப்பினும்வளந்தரு
ம்வண்மையுமலைக்கே. (உஅ)

ஐயந்தீரப்பொருளையுணர்த்தலு, மெய்ந்ந
டுநிலையுமிகுநிறைகோற்கே. (உகூ)

மங்கலமாகி யின்றியமையா, தியாவருமகி
ழ்ந்துமேற்கொளமெல்கிப், பொழுதின்முக
மலர்வுடையதுபூவே. (௩0)

மொழிகுணமின்மையுமிழிகுணவியல்பு,ம
ழுக்காறவாவஞ்சமச்சமாடலுங், கழற்குடமட
ர்பனைபருத்திக்குண்டிகை, முடத்தெங்கொப்
பனமுரண்கொள்சிந்தையு, முடையோரிலரா
சிரியராகுதலே. (௩௧)

பெய்தமுறையன்றிப் பிறழவுடன்றருஉங்
செய்திகழற்பெய்குடத்தின்சீரே. (௰௨)
தானேதரக்கொளி னன்றித்தன்பான், மே
விக்கொளக்கொடாவிடத்ததுமடற்பனை (௰௩)
அரிதிற்பெயக்கொண்டப்பொருட்டான்பிறர்
க், கெளிதீவில்லதுபருத்திக்குண்டிகை. (௰௪)
பல்வகையுதவிவழிபடுபண்பி, னல்லோர்க்க
ளிக்குமதுமுடத்தெங்கே. (௰௫)
ஈதலியல்பேயியம்புங்காலைக், காலமுமிடனு
ம்வாலிதினோக்கிச், சிறந்துழி யிருந்துதன்றெ
ய்வம்வாழ்த்தி, யுரைக்கப்படும்பொருளுள்ளத்
தமைத்து, விரையான்வெகுளான்விரும்பிமுக
மலர்ந்து, கொள்வோன்கொள்வகையறிந்தவ
னுளங்கொளக், கோட்டமின்மனத்தினூல்கொ
டுத்தலென்ப. (௰௬)
தன்மகனாசான்மகனேமன்மகன், பொருணனி
னிகொடுப்போன்வழிபடுவோனே, யுரைகோ
ளாளற்குரைப்பதுநூலே. (௰௭)
அன்னமாவேமண்ணொடுகிளியே, யில்லிக்கு
டமாடெருமைநெய்யரி, யன்னர்தலையிடைக
டையாணாக்கர். (௰௮)

களிமடிமானிகாமிகள்வன், பிணியனேழைபி ணக்கன்சினத்தன், றுயில்வோன்மந்தன்றொ ன்னூற்கஞ்சி, தடுமாறுளத்தன்றறுகணன்பா வி, படிறனின்னோர்க்குப்பகரார் நூலே. (௩௯)

கோடன்மரபேகூறுங்காலைப், பொழுதொடு சென்றுவழிபடன்முனியான், குணத்தொடுப ழகியவன்குறிப்பிற்சார்ந், திருவெனவிருந்து சொல்லெனச்சொல்லிப், பருகுவனன்னவார் வத்தனாகிச், சித்திரப்பாவையினத்தகவடங்கி ச், செவிவாயாகநெஞ்சுகளனாகக், கேட்டவை கேட்டவைவிடாதுளத்தமைத்துப், போவெ னப்போதலென்மனார்புலவர். (௪௰)

நூல்பயிலியல்பேநுவலின்வழக்கறிதல், பா டம்போற்றல்கேட்டவைநினைத்த, லாசாற்சார் ந்தவையமைவரக்கேட்ட, லம்மாண்புடையோ ர்தம்மொடுபயிறல், வினாதல்வினாயவைவிடுத் தலென்றிவை, கடனாக்கொளினேமடநனி யிகக்கும். (௪௧)

ஒருகுறிகேட்போனிருகாற்கேட்பிற், பெ

ருக நூலிற்பின்னுடிலனே. (சஉ)

முக்காற்கேட்பின்முறையறிந்துரைக்கும்.

ஆசானுரைத்த தமைவரக்கொளினுங், காற்கூறல்ல துபற்றலனுகும். (சச)

அவ்வினையாளரொடு பயில்வகையொருகாற், செவ்விதினுரைப்பவவ்விருகாலு, மையறு புலமைமாண்புடைத்தாகும். (சரு)

அழலினீங்கானணுகானஞ்சி, நிழலினீங்கா னிறைந்தநெஞ்சமோ, டெத்திறத் தாசானுவக்குமத்திற, மறத்திற்றி ரியாப்படர்ச்சி வழிபாடே. (சசா)

பொதுப்பாயிரமுற்றிற்று.

## சிறப்புப்பாயிரம்.

ஆக்கியோன்பெயரேவழியேயெல்லை, நூற்பெயர் யாப்பே நுதலியபொருளே, கேட்போர்பயனேடாயெண்பொருளும், வாய்ப்பக்காட்டல்பாயிரத்தியல்பே. (க)

காலங்களனே காரணமென்றிம், மூவகையேற்றிமொழிநருமுளரே. (உ)

முதனூல்கருத்தனளவுமிகுதி, பொருள்செ
ய்வித்தோன்றன்மைமுதனிமித்தினு, மிடுகுறி
யானுநூற்கெய்தும்பெயரே. (௩)

தொகுத்தல்விரித்தறொகைவிரிமொழிபெய
ர்ப், பெனத்தகுநூல்யாப்பீரிரண்டென்ப. (௪)

தன்னாசிரியன்றன்னொடுகற்றோன், றன்மா
ணாக்கன்றகுமுரைகாரனென், நின்னோர்பாயி
ரமியம்புதல்கடனே. (௫)

தோன்றாதோற்றித்துறைபலமுடிப்பினுந்,
தான்றற்புகழ்தறகுதியன்றே. (௬)

மன்னுடைமன்றத்தோலைத்தூக்கினுந், தன்
னுடையாற்ற லுணரா ரிடையினு, மன்னியவ
வையிடைவெல்லுறுபொழுதினுந், தன்னைம
றுதலைபழித்தகாலையுந், தன்னைப்புகழ்தலுந்த
கும்புலவோர்க்கே. (௭)

ஆயிரமுகத்தானகன்றதாயினும், பாயிரமி
ல்லதுபனுவலன்றே. (௮)

மாடக்குச்சித்திரமுமா நகர்க்குக்கோபுரமு,
மாடமைத்தோணல்லார்க்கணியும்போ- னாடி

மு,ஊன துரையா நின்றவணித் துரையையெந் நா
ற்கும், பெய் துரையாவைத்தார்பெரிது. (௯)

ஆசூத்திரம் - ருரு

சிறப்புப்பாயிரமுற்றிற்று.

---

## எழுத்ததிகாரம்.

### முதலாவதுஎழுத்தியல்.

பூமலியசோகின்புனை நிழலமர்ந்த, நான்மு
கற்றொழுது நன்கியம்புவனெழுத்தே. (௧)

எண்பெயர்முறைபிறப்புருவமாத்திரை, மு
தலீறிடைநிலைபோலியென்று,பதம்புணர்பெ
னப்பன்னிருபாற்றதுவே. (௨)

மொழிமுதற்காரண மாமணுத்திரளொலி,
யெழுத்ததுமுதல்சார்பெனவிருவகைத்தே.

உயிருமுடம்புமாமுப்பதுமுதலே. (௪)

உயிர்மெய்யாய்தமுயிரளபொற்றள, பஃகி
ய இ உ ஐ ஔ மஃகான், றனிநிலைபத்துஞ்சார்
பெழுத்தாகும். (௫)

உயிர்மெய்யிரட்டுநூற்றெட்டுயராய்த,மெட்டுயிரளபெழுமூன்றொற்றளபெடை, யாறேழஃகுமிம்முப்பானே,ழுகரமாறாறைகான்மூன்றே, யௌகானொன்றேமஃகான்மூன்றே, யாய்தமிரண்டொடு சார்பெழுத் துறுவிரி, யொன்றொழிமுந்நூற்றெழுபானென்ப. (௬)

இடுகுறிகாரணப்பெயர்பொதுச்சிறப்பின.

அம்முதலீராறாவிகம்முதன், மெய்ம்மூவாறெனவிளம்பினர்புலவர். (௭)

அவற்றுள், அ இ உ எ ஒக்குறிலைந்தே. (௮)

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ நெடில். (௯)

அ இ உம்முதற்றனிவரிற்சுட்டே. (௰)

எய்யாமுதலும்ஆஓவீற்றும், ஏயிருவழியும் வினாவாகும்மே. (௰௧)

வல்லினங்கசடதபறவெனவாறே. (௰௨)

மெல்லினம்ஙஞணநமனவெனவாறே. (௰௩)

இடையினம்யரலவழளவெனவாறே. (௰௪)

ஐஔஇஉச்செறியமுதலெழுத், திவ்விரண்டோரினமாய் வரன்முறையே. (௰௫)

தானமுயற்சியளவுபொருள்வடி, வானவொ

ன்றாதியோர்புடையொப்பினமே. (௰௬)

சிறப்பினுமினத்தினுஞ்செறிந்தீண்டம்மு
த, னடத்தறானேமுறையாகும்மே. (௰௭)

நிறையுயிர்முயற்சியினுள்வளிதுரப்ப, வெ
ழுமணுத்திரளுரங்கண்டமுச்சி, மூக்குற்றிதழ்
நாப்பல்லணத்தொழிலின், வெவ்வேறெழுத்
தொலியாய்வரல்பிறப்பே. (௰௮)

அவ்வழி, ஆவியிடைமையிடமிடறாகும், மே
வுமென்மைமூக்குரம்பெறும்வன்மை. (௰௯)

அவற்றுள், முயற்சியுள்அ ஆ அங்காப்பு
டைய. (௨௰)

இ ஈ எ ஏ ஐ அங்காப்போ, டண்பன்முதனாவி
ளிம்புறவருமே. (௨௧)

உ ஊ ஒ ஓ ஔ விதழ்குவிவே. (௨௨)

கஙவுஞ் சஞவும் டணவுமுதலிடை, நுனிநாவ
ண்ணமுறமுறைவருமே. (௨௩)

அண்பல்லடிநாமுடியுறத்தநவரும். (௨௪)

மீகீழிதழுறப்பம்மப்பிறக்கும். (௨௫)

அடிநாவடியணமுறயத்தோன்றும். (௨௬)

அண்ணநுனிநாவருடரழவரும். (௨௭)

அண்பன்முதலுமண்ணமுமுறைபி, னுவி

விம்புவீங்கியொற்றவும்வருடவும், லகாரளகா ரமாயிரண்டும்பிறக்கும். (௨௮)

மேற்பல்லிதழுறமேவிடும்வவ்வே. (௨௯)

அண்ணநுனிநாநனியுறிற்றனவரும். (௩௰)

ஆய்தக்கிடந்தலையங்காமுயற்சி, சார்பெழு த்தேனவுந்தம்முதலனைய. (௩௧)

எடுத்தல்படுத்தல்விதலுழப்பிற், றிரியுந்தத் தமிற்சிறிதுள்வாகும். (௩௨)

புள்ளிவிட்டவ்வொடுமுன்னுருவாகியு,மேனையு யிரோடுருவுதிரிந்து, முயிரளவாயதன்வடி வொளித்திருவயிற், பெயரொடுமொற்றுமுன் னாய்வருமுயிர்மெய். (௩௩)

குறியதன்முன்னராய்தப்புள்ளி, யுயிரொடு புணர்ந்தவல்லாறன்மிசைத்தே. (௩௪)

இசைகெடின்மொழி முதலிடைகடைநிலை நெடில், ளபெழுமவற்றவற்றினக்குறில் குறியே. (௩௫)

ஙஞணநமனவயலளவாய்த, மளபாங்குறிலி ணைகுறிற்கீழிடைகடை, மிகலேயவற்றின்குறி யாம்வேறே. (௩௬)

யகரம்வரக்குறளுத்திரியிகரமு,மசைச்சொ

ன்மியாவினிக்ரமுங்குறிய. (௩௭)

நெடிலொடாய்தமுயிர்வலி மெலியிடை,
தொடர்மொழியிறுதிவன்மையூருகர, மஃகு
ம்பிறமேற்றொடரவும்பெறுமே. (௩௮)

தற்சுட்டளபொழியைம் மூவழியு, நையு
மௌவுமுதலற்றாகும். (௩௯)

ண ன முன்னும் வஃகான் மிசையுமக்குறு
கும். (௪௰)

ளவீற்றியைபினுமாய்தமஃகும். (௪௧)

தொல்லைவடிவினவெல்லாவெழுத்துமாண்,
டெய்துமேகாரமோகாரமெய்புள்ளி. (௪௨)

மூன்றுயிரளபிரண்டாநெடிலொன்றே,
குறிலோடையௌக்குறுக்கமொற்றள, பரை
யொற்றிஉக்குறுக்கமாய்தங், கால்குறண்மஃ
கானாய்தமாத்திரை. (௪௩)

இயல்பெழுமாந்தரிமைநொடிமாத்
திரை. (௪௪)

ஆவியுமொற்று மளவிறந்திசைத்தலு, மே
வுமிசைவிளிபண்டமாற்றாதியின். (௪௫)

பன்னீருயிருங்கசதநபமவய ஞஙவீரொற்
றுயிர்மெய்யுமொழிமுதல். (௪௬)

உஊஒஓவலவொடுவம்முதல். (சஅ)
அ ஆ உ ஊ ஒ ஓயம்முதல். (சகூ)
அஆஎஒவ்வோடாகுஞம்முதல். (ருய)
சுட்டியாவெகரவினுவழியவ்வை, யொட்டி
நவ்வுமுதலாகும்மே. (ருக)
ஆவிஞணநமனயரலவழளமெய், சாயுமு
கரநாலாறுமீறே. (ருஉ)
குற்றுயிரளபினீருமெகர, மெய்யொடே
லாதொந்நவ்வோடாமௌ, ககரவகரமோ
டாகுமென்ப. (ருா)
நின்றநெறியேயுயிர்மெய்முதலீறே. (ருச)
கசபதவொழித்தவீரேழன்கூட்ட, மெய்ம்
மபக்குடனிலைரழவொழித்தீரொட், டாகுமிவ்
விருபான்மயக்குமொழியிடை, மேவுமுயிர்
மெய்மயக்களவின்றே. (ருரு)
ஙம்முன்கவ்வாம்வம்முன்யவ்வே. (ருசா)
ஞநமுன்றம்மினம்யகரமோடாகும். (ருஎ)

இடுகுறி-என்னுமேழாவது சூத்திரத்தொகையிலேத
ப்பிற்று - அர்முதலென்பது அ வது- அதை - எ வதாகச்
ச் சேர்த்ததினுலே-பன்னீருயிருமென்றது, சகூ - வதா
யிற்று, அது-சஎ வதெனக்காண்க.

டறமுன் கசபமெய்யுடன்மயங்கும். (௫௮)
ணனமுன்னினங்கசஞபமயவவ்வரும். (௫௯)
மம்முன்பயவ மயங்குமென்ப. (௬௰)
யரழமுன்னர்மொழிமுதன் மெய்வரும்.
லளமுன்கசபவயவொன் றும்மே. (௬௨)
ரழவல்லன தம்முற்றுமுடனிலையும். (௬௩)
யரழவொற்றின்முன் க ச த ப ங ஞ நம, வீ
ரொற்றும்ரழத்தனிக்குறிலணையா. (௬௪)
லளமெய்திரிந்தனணமுன்மகார, நைந்தி
ரொற்றுஞ்செய்யுளுள்ளே. (௬௫)
தம்பெயர்மொழியின்முதலுமயக்கமு, மி
ம்முறைமாறியுமியலுமென்ப. (௬௬)
மகரவிறுதியஃறிணைப்பெயரி, னகரமோ
டுறழா நடப்பனவுளவே. (௬௭)
அஜமுதலிடையொக்குஞ்சஞபமுன். (௬௮)
ஐகான்யவ்வழிநவ்வொடுசில்வழி, ஞஃகா னு
றழுமென்மருமுளரே. (௬௯)
அம்முனிகரம்யகர மென்றிவை, யெய்தி
னையொத்திசைக்குமவ்வோ, டுவ்வும்வவ்வு
மௌவோரன்ன. (௭௰)
மெய்களகரமுநெட்டுயிர்காரமு, மை

யௌக்கானுமிருமைக்குறிலிவ், விரண்டொடு
கரமமாஞ்சாரியை பெறும்பிற. (எக)

மொழியாய்த்தொடரினு முன்னனைத்தெ
ழுத்தே. (எஉ)

எழுத்தியன்முற்றுப்பெற்றது.

இரண்டாவதுபதவியல்.



எழுத்தேதனித்துந்தொடர்ந்தும்பொருட
ரிற், பதமாமதுபகாப்பதம்பகுபதமென,வி
ருபாலாகியியலுமென்ப. (க)

உயிர்மவிலாறுந்தபநவிலைந்தும், கவசவி
ளுலும்யவ்விலொன்று, மாகுநெடினொதுவா
ங்குறி லிரண்டோ, டோரெழுத்தியல் பதமா
றேழ்சிறப்பின. (உ)

பகாப்பதமேழும்பகுபதமொன்பது, மெ
ழுத்தீருகத்தொடருமென்ப. (ரு)

பகுப்பாற்பயனற்றிடுகுறியாகி, முன்னே
யொன்ருய்முடிந்தியல்கின்ற, பெயர்வினையி
டையுரிநான்கும்பகாப்பதம். (சு)

பொருளிடங்காலஞ் சினைகுணந்தொழிலி
ன், வருபெயர்பொழுதுகொள் வினைபகுப

தமே. (௫)

பகுதிவிகுதியிடைநிலைசாரியை, சந்திவி காரமாறினுமேற்பவை, முன்னிப்புணர்ப்ப முடியுமெப்பதங்களும். (௬)

தத்தம்பாகாப்பதங்களேபகுதியாகும். (௭)

செம்மைசிறுமை சேய்மைதீமை, வெம் மைபுதுமைமென்மைமேன்மை, திண்மையு ண்மை நுண்மையிவற்றெதி, ரின்னவும்பண் பிற் பகாநிலைப்பதமே. (௮)

ஈறுபோதலிடையுகரமிய்யாத, லாதிநீட லடியகரமையாத, றன்னொற்றிரட்டன் முன்னி ன்றமெய்திரித, லினமிகலினையவும் பண்பிற்கி யல்பே. (௯)

நடவாமடிசீவிடுகூவேவை, நொப்போ வௌவுரிஞுண்பொருந்திருந்தின், றேய்பார் செல்வவ் வாழ்கேளஃகென், றெய்தியவிருபா ன்மூன்றாமீற்றவுஞ், செய்யெனேவல் வினைப் பகாப்பதமே. (௰)

செய்யென்வினைவழிவிப்பிதனிவரிற், செ ய்விவென்னேவ லிணையினீரேவல். (௰௧)

விளம்பியபகுதிவேறாதலும்விதியே. (௰௨)

அன்ஆன்அள்ஆள்அர்ஆர்பம்மார், அஆகுடுதுறுஎன்ஏன்அல்அன், அம்ஆம்எம்ஏம்ஓமொடும்மூர், கடதறஐஆய்இம்மின்இர்ஈர், ஈயர்கயவுமென்பவும்பிறவும், வினையின்விகுதிபெயரினுஞ்சிலவே. (௱௩)

இலக்கியங்கண்டதற் கிலக்கணமியம்பலிற், பகுதிவிகுதிபகுத்திடைநின்றதை, வினைப்பெயரல்பெயர்க் கிடைநிலையெனலே. (௱௪)

தடறவொற்றின்னேயைம்பான் மூவிடத், திறந்தகாலந்தருந்தொழிலிடைநிலை. (௱௫)

ஆநின்றுகின்றுகிறுமூவிடத்தி, னைம்பானிகழ்பொழுதறைவினையிடைநிலை. (௱௬)

பவ்வமூவிடத்தைம்பாலெதிர்பொழு, திசைவினையிடைநிலையாமிவைசிலவில. (௱௭)

றவ்வொடுகரவும்மைநிகழ்பல்லவுந், தவ்வொடிறப்புமெதிர்வும்டவ்வொடு, கழிவுங்கவ்வோடெதிர்வுமின்னேவல், வியங்கோளிம்மாரெதிர்வும்பாந்தஞ், செலவொடுவரவுஞ்செய்யுநிகழ்பெதிர்வு, மெதிர்மறைமும்மையுமேற்குமீங்கே. (௱௮)

இடையினான்குமீற்றிலிரண்டு, மல்லாவச்

சைவருக்கமுதலீறி, யவ்வாதிநான்மை ளவ்வா குமையையம், பொதுவெழுத்தொழிந்தநாலே ழுந்திரியும். (௰கூ)

அவற்றுள் - ஏழாமுயிரிய்யு மிருவுமைவரு க்கத், திடையின்மூன் றுமவ்வம் முதலு, மெ ட்டேயவ்வுமுப்பதுசயவு, மேலொன்றுசடவு மிரண்டுசதவு, மூன்றேயகவு மைந்திருகவ்வு, மாவீறையுடமீயீறிசரமும். (உ௰)

ரவ்விற்கம்முதலாமுக்குறிலும், லவ்விற்கி ம்முதலிரண்டும்யவ்விற், கிய்யுமொழிமுதலா கிமுன்வருமே. (உக)

இணைந்தியல்காலையரலக்கிகரமு, மவ்வக்கு கரமுநகரக்ககரமு, மிசைவரும்ரவ்வழியுவ்வு மாம்பிற. (உஉ)

றனழஎஒ வ்வுமுயிர்மெய்யுமுயிரள, பல் லாச்சார்புந்தமிழ்ப்பிறபொதுவே. (உங)

இரண்டாவதுபதவியன்முற்றுப்பெற்றது.

ஆ - இயல் - உ - இ - சூத்திரம் - கூடு.

மூன்றாவது - உயிரீற்றுப்புணரியல்.

---

மெய்யுயிர்முதலீறுமிருபதங்களுந், தன்

ஞெடும்பிறிதொடுமல்வழிவேற்றுமைப்,பொருளிற்பொருந்துழி நிலைவருமொழிக, ளியல்பொடுவிகாரத்தியைவதுபுணர்ப்பே. (க)

வேற்றுமையைம்முதலாறுமல்வழி,தொழில்பண்புவமையும்மையன்மொழி, யெழுவாய்விளியீரெச்சமுற்றிடையுரி, தழுவுதொடரடுக்கெனவீரேழே. (உ)

விகாரமனைத்து மேவலதியல்பே. (ஙு)

தோன்றறிரிதல் கெடுதல்விகார, மூன்றுமொழிமூவிடத்துமாகும். (ச)

வலித்தன்மெலித்தனீட்டல்குறுக்கல், விரித்தறொகுத்தலும்வருஞ்சேய்யுள்வேண்டுழி.

ஒருமொழிமூவழிக்குறைத்தலுமனைத்தே.

ஒருபுணர்க்கிரண்டு மூன்றுமுறப்பெறும்.

எண்மூவெழுத்தீற்றெவ்வகைமொழிக்கு, முன்வருஞநமயவக்களியல்புங், குறில்வழியத்தனியைந்நொதுமுன்மெலி, மிகலுமாம்ணளனலவழிநத்திரியும். (அ)

பொதுப்பெயருயர்திணைப் பெயர்களீற்றுமெய், வலிவரினியல்பாமாவியரமுன்,வன்மைமிகாசில விகாரமாமுயர்திணை. (கூ)

சுற்றியாவினுவிளிப்பெயர்முன்வலியியல்பே.
ஆவியரழவிறுதிமுன்னிலைவினை, யேவன்முன்வல்லின மியல்பொடுவிகற்பே. (மக)
இஈஐவழியவ்வுமேனை, யுயிர்வழிவவ்வுமே முனிவ்விருமையு, முயிர்வரினுடம்படு மெய்யென்றாகும். (மஉ)
எகரவினாமுச்சுட்டின்முன்ன, ருயிரும்யகரமுமெய்தின்வவ்வும். பிறவரினவையுந் தூக்கிற்சுட்டு, நீளின்யகரமுந்தோன்றுதனெறியே.
உயிர்வரினுக்குறண்மெய்விட்டோடும், யவ்வரினியயாமுற்றுமற்றொரோவழி. (மச)
இயல்பினும்விதியினு நின்றவுயிர்முன், கசதபமிகும்விதவாதனமன்னே. (மரு)
மரப்பெயர்முன்னரினமெல்லெழுத்து, வரப்பெறுனவுமுளவேற்றுமைவழியே. (மசா)
செய்யியவென்னும்வினையெச்சம்பல்வகைப், பெயரினெச்சமுற்றாறனுருபே, யஃறிணைப்பன்மை யம்மமுன்னியல்பே. (மஎ)
வாழியவென்பத னீற்றினுயிர்மெய், யேகலுமுரித்தஃதேகினுமியல்பே. (மஅ)
சாவவென்மொழியீற்றுயிர்மெய்சாதலு

ம்விதி. (மகூ)

பலசிலவெனுமிவைதம்முன்றாம்வரி, னிய ல்புமிகலுமகரமேக, லகரம்றகரமாகலும்பிற வரி, னகரம்விகற்பமாகலுமுளபிற. (உ0)

அல்வழியாமாயியாமுற்றுமுன்மிகா. (உக)

குறியதன்கீழாக்குறுகலுமதனே, டுகரமே ற்றலுமியல்புமாந்தூக்கின். (உஉ)

அன்றியின்றியென்வினையெஞ்சிகரந், தொ டர்பினுளுகரமாய்வரினியல்பே. (உங)

உரிவருஞாழியினீற்றுயிர்மெய்கெட, மருவு ம்டகரமுரியின்வழியே, யகர உயிர்மெய்யா மேற்பனவரினே. (உச)

சுவைப்புளிமுன்னினமென்மையுந் தோன் றும். (உரு)

அல்வழிஇஐமுன்னராயி, னியல்புமிகலு ம்விகற்பமுமாகும். (உசா)

ஆமுன்பகரவீயனைத்தும்வரக்குறுகு, மே லனவல்வழியியல்பாகும்மே, (உஎ)

பவ்வீநீமீமுன்னரல்வழி, யியல்பாம்வலி மெலிமிகலுமாம்மீக்கே. (உஅ)

மூன்றுறாருபெண் வினைத்தொகைச்சுட்டு,

8655

031

றுகுறுகரமுன்னரியல்பாம். (உகூ)

அது முன்வருமன்றுன்றுந்தூக்கின். (௬௰)

வன்றொடரல்லனமுன்மிகாவல்வழி. (௬க)

இடைத்தொடராய்தத்தொடரொற்றிடையின், மிகாநெடிலுயிர்த்தொடர்முன்மிகாவேற்றுமை. (௬உ)

நெடிலோடுயிர்த்தொடர்க்குற்றுகரங்களுட், டறவொற்றிரட்டும்வேற்றுமைமிகவே. (௬௩)

மென்றொடர்மொழியுட்சிலவேற்றுமையிற், றம்மினவன்றொடராகாமன்னே. (௬௪)

ஐயீற்றுடைக்குற்றுகரமுமுளவே- (௬௫)

திசையொடுதிசையும்பிறவுஞ்சேரி,னிலையீற்றுயிர்மெய்கவ்வொற்றுநீங்கலும், றகரம்னலவாத்திரிதலுமாம்பிற. (௬௬)

தெங்குநீண்டீற்றுயிர்மெய்கெடுங்காய்வரின்.

எண்ணிறையளவும்பிறவுமெய்தி, னொன்றுமுதலெட்டீறுமெண்ணுண், முதலீரெண்முதனீளுமூன்றுறேழ், குறுகுமாறேழல்லவற்றி, னீற்றுயிர்மெய்யுமேழனுயிரு, மேகுமேற்புழியென்மனார்புலவர். (௬அ)

ஒன்றன்புள்ளிரகரமாக, விரண்டனொற்று

யிரோசவுவ்வருமே. (௩௯)

மூன்றனுருப்பழிவும்வந்ததுமாகும் (௪௰)

நான்கன்மெய்யேலறவாகும்மே. (௪௧)

ஐந்தனொற்றடைவதுமினமுங்கேடும். (௪௨)

எட்டனுடம்புணவ்வாகுமென்ப. (௪௩)

ஒன்பானொடுபத்துநூறுமொன்றின், முன்
னதினேனையமுரணியொவ்வொடு, தகரநிறீஇ
ப்பஃ தகற்றினவ்வை, நிரலெண்ளவாத் திரிப்
பதுநெறியே. (௪௪)

முதலிருநான்கா மெண்முனர்ப்பத்தி, னி
டையொற்றேகலாய்தமாக, லெனவிருவிதியு
மேற்குமென்ப. (௪௫)

ஒருபஃதாதிமுன்னொன்றுமுதலொன்பா,
னெண்ணுமவையூர் பிறவுமெய்தி, னாய்தமழி
யவாண்டாகுந்தவ்வே. (௪௬)

ஒன்றுமுதலீரைந்தாயிரங்கோடி, யெண்
ணிறைபளவும்பிறவரிற்பத்தி, னீற்றுயிர்மெய்
கெடுத்தின்னுமிற்று, மேற்பதேற்குமொன்ப
துமினத்தே. (௪௭)

இரண்டுமுன்வரிற் பத்தினீற்றுயிர் மெய்,
கரந்திடவொற்றுனவ்வாகுமென்ப. (௪௮)

ஒன்பதொழித்தவெண்ணொன்பதுமிரட்டின், முன்னதின்முன்னலவோடவுயிர்வரின், வவ்வுமெய்வரின்வந்ததுமிகநெறி. (சகூ)

பூப்பெயர் முன்னினமென்மையுந் தோன்றும். (ருய)

இடைச்சொல்லேயோமுன்வரினியல்பே.

வேற்றுமையாயினேனைநெறுமொழி, யீற்றழிவொடுமம்மேற்பவுமுளவே. (ருஉ)

பனைமுன், கொடிவரின்மிகலும்வலிவரினை போ, யம்முந்திரள்வரினுறழ்வுமட்டுறவைகெட்டந்நீளலுமாம்வேற்றுமை. (ருரு)

மூன்றாவது-

உயிரீற்றுப்புணரியன்முற்றுப்பெற்றது.

ஆக - இ-ல்-ரு-இ- சூ-ம்- ௱சஅ.

நான்காவது,

மெய்யீற்றுப்புணரியல்.

---

உடன்மேலுயிர்வந்தொன்றுவதியல்பே. (க)

தனிக்குறின்முன்னொற்றுயிர்வரினிரட்டும்.

தன்னொடுமெய்ம்முன் யவ்வரினிகரந், துன்னுமென்றுதுணிநருமுளரே. (௩)

ஞண நம லவ ளன வொற்றிறுதொழிற் பெய, ரேவல்வினைநனியவ்வன்மெய்வரி, னுவ்வுறுமேவ லுறுசிலசில்வழி. (ச)

நவ்விறுதொழிற்பெயர்க் கவ்வுமாம்வேற் றுமை. (ரு)

ணனவல்லினம்வரட்டறவும்பிறவரி, னியல்புமாகும் வேற்றுமைக்கல்வழிக், கனைத்துமெய்வரினுமியல்பாகும்மே. (சா)

குறிலணைவில்லாணனக்கள்வந்த, நகரந்திரிந்துழிநண்ணுங்கேடே. (எ)

சாதிகுழூஉப்பரண்கவண்பெயரிறுதி, யியல்பாம்வேற்றுமைக்குணவெண்சாண்பிற, டவ்வாகலுமாமல்வழியும்மே. (அ)

னஃகான்கிளைப்பெயரியல்புமஃகா, னடைவுமாகும்வேற்றுமைப்பொருட்கே. (கூ)

மீன்றவ்வொடுபொரூஉம் வேற்றுமை வழியே. (ய)

தேன்மொழி மெய்வரி னியல்புமென்மை, மேவினிறுதியழிவும்வலிவரி, னீறுபோய்வலிமெலிமிகலுமாமிருவழி. (யக)

மரமல்லெகின்மொழியியல்புமகர, மருவ

வலிமெலிமிக லுமாகும். (௰௨)
குயினூன் வேற்றுமைக்கண்ணுமியல்பே.
மின்பின்பன்கன் றொழிற்பெயரனைய, கன்
னவ்வேற்றுமென்மையோடுறழும். (௰௪)
தன் னென் னெனன்பவற்றீற்றுன வ்வன்மை
யோ, டுறழுநின்னீ றியல்பாமுறவே. (௰௫)
மவ்வீறொற்றழிந் துயிரீறொப்பவும், வன்
மைக்கினமாத்திரிபவுமாகும். (௰௬)
வேற்றுமைமப்போய் வலிமெலியுறழ்வு,ம
ல்வழியுயிரிடைவரினியல்பு முள. (௰௭)
நுந்தம்,எம்நம்மீறுமவ்வருஞநவே. (௰௮)
அகமுனர்ச்செவிகை வரினிடையனகெடும்.
ஈமுங், கம்முமுருமுந்தொழிற்பெயர்மா
னு, முதலனவேற்றுமைக்கவ்வும்பெறுமே.
யரழமுன்னர்க்கசதபவல்வழி, யியல்புமிக
லுமாகும்வேற்றுமை, மிகலுமினத் தோடுறழ்
தலும் விதிமேல். (௨௧)
தமிழவ்வுறவும்பெறும்வேற்றுமைக்கே,தா
ழுங்கோல்வந்துறுமேலற்றே. (௨௨)
கீழின்முன்வன்மைவிகற்பமுமாகும். (௨௩)
லளவேற்றுமையிற்றடவுமல்வழி, யவற்றோ

டுறழ்வும்வலிவரினுமெலி, மேவினணவுமிடை
வரினியல்பு, மாகுமிருவழியானுமென்ப. ௨௪.
குறில்வழிலளத்தவ்வணையினுட்த், மாகவும்
பெறூஉமல்வழியானே. (௨௫)
குறில்செறியாலளவல்வழிவந்த, தகரந்திரி
ந்தபிற்கேடுமீரிடத்தும், வருநத்திரிந்தபின்
மாய்வும்வலிவரி, னியல்புந்திரிபுமாவன
வுளபிற. (௨௬)
லளவிறுதொழிற்பெயரீரிடத்துமுவ்வுறு,வ
லிவரினல்வழியியல்புமாவனவுள. (௨௭)
வல்லேதொழிற்பெயரற்றிருவழியும், பல
கைநாய்வரினும்வேற்றுமைக்கவ்வுமாம். ௨௮
நெல்லுஞ் செல்லுங்கொல்லுஞ் சொல்லு,
மல்வழியானும்றகரமாகும். (௨௯)
இல்லெனின்மைச்சொற்கையடைய, வன்
மைவிகற்பமுமாகாரத்தொடு,வன்மையாகலு
மியல்புமாகும். (௩௰)
புள்ளும்வள்ளுந்தொழிற்பெயருமானும்.௩௧.
சுட்டுவகரமூவினமுறமுறைய்ய, யாய்தமு
மென்மையுமியல்புமாகும். (௩௨)
தெவ்வென்மொழியேதொழிற்பெயரற்

றே, மவ்வரின்வஃகான்மவ்வுமாகும். (௬௩)

னலமுன்றனவும்ணளமுன்டணவு, மாகு ந்தநக்களாயுங்காலே. (௬௪)

உருபின்முடிபவையொக்குமப்பொருளி னும். (௬௫)

இடையுரிவடசொலி னியம்பியகொளாதவு ம், போலியுமருஉவும் பொருந்தியவாற்றிற், கியையப்புணர்த்தல்யாவர்க்குநெறியே. ௬௬

நான்காவது-

மெய்யீற்றுப்புணரியல் முற்றுப்பெற்றது.

ஆ- இ-ல்- ச-ஐ- சூம்- ௱அச.

ஐந்தாவது,

உருபுபுணரியல்.

---

ஒருவனொருத்திபலவொன்றுபலவென, வருபெயரைந்தொடுபெயர்முதலிருநான், குருபுமுறத்தரநாற்பதாமுருபே. (௧)

பெயர்வழித்தம்பொருடரவருவுருபே. ௨

ஒற்றுயிர்முதலீற்றுருபுகள்புணர்ச்சியி, னொக்குமன்னப்பெயர்வேற்றுமைப்புணர்ப் பே. (௩)

பதமுன்விகுதியும் பதமுமுருபும், புணர்வழியொன்றும் பலவுஞ்சாரியை, வருதலுந் தவிர்தலும்விகற்பமுமாகும். (௪)

அன் ஆன் இன் அல் அற்றிற்றத்தம், தம் நம் நும் ஏ் அ உ ஐகுன, இன்னபிறவும்பொதுச்சாரியையே. (௫)

எல்லா மென்பதிழிதிணையாயி, னற்றோடு ருபின் மேலும்முறுமே, யன்றேனம்மிடையடைந்தற்றுகும். (௬)

எல்லாருமெல்லீருமென்பவற்றும்மை, தள்ளிநிரலே தம் நும்சாரப், புல்லுமுருபின் பின்னரும்மே. (௭)

தான்றநாமுதல்குறுகும்யான்யாம், நீநீர் என்எம்நின் நும்மாம்பிற,குவ்வினவ்வருநான் காறரட்டல. (௮)

ஆமாகோனவ்வணையவும்பெறுமே. (௯)

ஒன்றுமுதலெட்டீறுமெண்ணுர், பத்தின் முன்னுன்வரிற் பவ்வொற்றொழியமே, லெல்லாமோடுமொன்பதுமிற்றே. (௰)

வவ்விறுசுட்டிற்கற்றுறல்வழியே. (௰௧)

சுட்டின்முன்னுய்த மன்வரிற்கெடுமே. ௰௨

அத்தினகரமகரமுனையில்லை. (௰௩)

இதற்கிதுசாரியையெனினள வின்மையின், விகுதியும்பதமு முருபும்பகுத்திடை, நின்ற வெழுத்தும்பதமுமியற்கையு, மொன்றவுணர்த்தலுரவோர்நெறியே. (௰௪)

விகுதிபதஞ்சாரியையுருபனைத்தினு, முனைத்தவிதியினேர்ந்தொப்பனகொளலே. (௰௫)

இயல்பின்விகாரமும்விகாரத்தியல்பு, முயர்திணையிடத்துவிரிந்துந்தொக்கும், விரவுப் பெயரின்விரிந்துநின்று, மன்ன பிறவுமாகு மையுருபே. (௰௬)

புள்ளியுமுயிருமாயிறுசொன்முன், றம்மினாகியதொழின்மொழிவரினே, வல்லினம்விகற்பமுமியல்புமாகும். (௰௭)

இதற்கிதுமுடிபென்றெஞ்சாதியாவும், விதிப்பளவின்மையின்விதித்தவற்றியலான், வகுத்துரையாதவும்வகுத்தனர்கொளலே. (௰௮)

ஐந்தாவது, உருபுபுணரியன்முற்றுப்பெற்றது

அடையெண்பெயர்முறைதோற்றம்வடிவளவாதியந்த
மிடைநிலைபோலியென்றீரைந்தெழுத்துமிருபதமும்
படுபுணர்மென்றினியல்பும்விகாரமுஞ்சாரியையு
முடனுணர்வாரையெழுத்துணர்வாரென்றுரைத்தமரே.

எழுத்ததிகாரமுற்றிற்று.

இரண்டாவது-
# சொல்லதிகாரம்.

## முதலாவது- பெயரியல்.

முச்சகநிழற்றுமுழுமதிமுக்குடை, யச்சுதனடிதொழுதறைகுவன்சொல்லே. (க)

ஒருமொழிதொடர்மொழி பொதுமொழியென்று, விருதிணையைம்பாற்பொருளையுந்தன்னையு, மூவகையிடத்தும்வழக்கொடுசெய்யுளின், வெளிப்படைகுறிப்பின்விரிப்பதுசொல்லே. (உ)

ஒருமொழியொருபொருளனவாந்தொடர்மொழி,பலபொருளனபொதுவிருமையுமேற்பன. (ங)

மக்கடேவர் நரகருயர்திணை, மற்றுயிருள்ளவுமில்லவுமஃறிணை. (ச)

ஆண்பெண்பலரென முப்பாற்றுயர்திணை.

ஒன்றேபலவென்றிருபாற்றஃறிணை. (ரு)

பெண்மை விட்டா ணவாவுவபேடாண்பா, லாண்மை விட்டல்லதவாவுவபெண்பா, லிருமையுமஃறிணையன்னவுமாகும். (எ)

படர்க்கை வினை முற்று நாமங் குறிப்பிற்

பெறப்படுந்திணைபாலனைத்துமேனை, யிடத்த
வற்றொருமைப் பன்மைப்பாலே. (௮)

தன்மைமுன்னிலைபடர்க்கை மூவிடனே. ௯

இலக்கண முடையதிலக்கணப்போலி, மரூஉ
வென்றாகு மூவகையியல்பு, மிடக்கரடக்கன்
மங்கலங்குழூஉக்குறி, யெனுமுத்தகுதியோ
டாறும் வழக்கியல். (௰)

பல்வகைத்தாதுவி னுயிர்க்குடல்போற்பல,
சொல்லாற்பொருட்கிடனாக வுணர்வினின், வ
ல்லோரணிபெறச்செய்வன செய்யுள். (௰௧)

ஒன்றொழி பொதுச் சொல்விகாரந் தகுதி,
யாகுபெயரன்மொழிவினைக்குறிப்பே, முத
றொகைகுறிப்போடின்னபிறவுங், குறிப்பிற்
றருமொழியல்லனவெளிப்படை. (௰௨)

அதுவே-இயற்சொற்றிரிசொலியல்பிற்பெ
யர்வினை, யெனவிரண்டாகுமிடையுரியடுத்து,
நான்குமாந்திசைவடசொலணுகாவழி. (௰௩)

செந்தமிழாகித்திரியாதியார்க்குந், தம்பொ
ருள் விளக்குந்தன்மையவியற்சொல். (௰௪)

ஒருபொருள்குறித்தபலசொல்லாகியும், ப
லபொருள்குறித்தவொருசொல்லாகியு, மரிது

ணர்பொருளன திரிசொல்லாகும்.' (௰௫)

செந்தமிழ்நிலஞ்சேர்பன்னிருநிலத்தினு,
மொன்பதிற்றிரண்டினிற் றமிழொழிநிலத்தி
னுந், தங்குறிப்பினவே திசைச்சொல்லென்ப.

பொதுவெழுத்தானுஞ்சிறப்பெழுத்தானு,
மீரெழுத்தானு மியைவனவடசொல். (௰௭)

இடுகுறிகாரணமரபோடாக்கந், தொடர்
ந்துதொழிலலகாலந்தோற்றா, வேற்றுமைக்
கிடனாய்த்திணைபாலிடத்தொன், றேற்பவும்
பொதுவுமாவனபெயரே. (௰௮)

அவற்றுட் - கிளையெண் குழூஉ முதற்பல்
பொருடிணைதே, மூர்வானகம்புறமுதலநிலன்
யாண், டிருதுமதிநாளாதிக்காலந், தோள்கு
ழன்மார்புகண்காதுமுதலுறுப், பளவறிவொ
ப்புவடிவுநிறங்கதி, சாதிகுடிசிறப்பாதிப்பல்
குண, மோதலீதலாதிப்பல்வினை, யிவையடை
சுட்டுவிகுதிப்பிறமற்றோ, டொற்றனவ்வீறுநம்பி
யாடூஉ, விடலைகோவேள்குரிசிலோன்ற, லின்
னனவாண்பெயராகுமென்ப. (௰௯)

கிளைமுதலாகக்கிளந்தபொருள்களுள், எவ்
வொற்றிகரக்கேற்றவீற்றவுந், தோழிசெவிலி

மகடூஉ நங்கை, தையலோடின் னனபெண்பாற்பெயரே. (உ0)

கிளந்தகிளைமுதலுற்றரவ்வீற்றவுங், கள்ளெனீற்றினேற்பவும்பிறவும், பல்லோர்பெயரின் பகுதியாகும். (உக)

வினைச்சுட்டுடனும்வேறுமாம்பொருள், ளாதியுறுதுச்சுட்டணையாய்த, மொன்றனெண்ணின்னனவொன்றன்பெயரே. (உஉ)

முன்னரவ்வொடுவருவையவ்வுஞ், சுட்டிறுவவ்வுங்கள்ளிறுமொழியு, மொன்றலெண்ணுமுள்ளவில்ல, பல்லசில்லவுளவிலபலசில, வின்னவும்பலவின்பெயராகும்மே. (உ௩)

பால்பகாவஃறிணைப்பெயர்கள்பாற்பொதுமைய. (உச)

முதற்பெயர் நான்குஞ் சினைப்பெயர் நான்குஞ், சினை முதற் பெயரொருநான்குமுறையிரண்டுந், தன்மை நான்குமுன்னிலையைந்துமெல்லாந்தாந்தானின்னனபொதுப்பெயர். (உரு)

ஆண்மைபெண்மையொருமை பன்மையி, னுமந்நான்மைகளாண் பெண்முறைப்பெயர்.

அவற்றுள்- ஒன்றேயிருதிணைத் தன்பாலே

றுகும். (உஎ)

தன்மையானுன் யாநாமுன்னிலை, யெல்லீ ர்நீயிர்நீவிர்நீர்நீ, யல்லனபடர்க்கை யெல்லா மெனல்பொது. (உஅ)

வினையின்பெயரோபடர்க்கைவினையா,லணை யும் பெயரோயாண்டுமாகும். (உகூ)

தான்யா னுனீ யொருமைபன்மைதாம்,யா நாமெலாமெலீர்நீயிர்நீர்நீவிர். (௩௰)

ஒருவனொருத்திப்பெயர்மேலெண்ணில.

ஒருவனென்ப துயரிருபாற்றுய்ப், பன்மை வினைகொளும்பாங்கிற்றென்ப. (௩உ)

பொருண்முதலாறோடளவை சொற்றுனி, கருவிகாரியங்கருத்தனுதியு, ளொன்றன் பெய ரானதற்கிடைபிறிதைத், தொன்முறையுளாப் பனவாகுபெயரே. (௩௩)

எற்குமெவ்வகைப்பெயர்க்குமீறுய்ப்பொ ருள், வேற்றுமைசெய்வனவெட்டேவேற்று மை. (௩௪)

பெயரேஐஆல்குஇன்அதுகண்,விளியென் றுகுமவற்றின்பெயர்முறை. (௩௫)

ஆறனுருபுமேற்குமவ்வுருபே. (௩௬)

நீயிர் நீவிர் நானெழுவாயலபெறா. (ருஎ)
அவற்றுள் - எழுவாயுருப்புதிரிவில்பெயரோ, வினைபெயர்வினாக்கொளலதன்பயனிலையே.
இரண்டாவதனுருபையேயதன் பொருளாக்கலழித்தலடைதனித்த, லொத்தலுடைமை யாதியாகும். (ருகூ)
மூன்றாவதனுருபாலானொடொடு, கருவி கருத்தாவுடனிகழ்வதன்பொருள். (சய)
நான்காவதற்குருபாகுங்குவ்வே, கொடை பகைநேர்ச்சிதகவதுவாதல், பொருட்டுமுறை யாதியினிதற்கிதெனல்பொருளே. (சக)
ஐந்தாவதனுருபில்லுமின்னு, நீங்கலொப் பெல்லையேதுப்பொருளே. (சஉ)
ஆறனொருமைக்கதுவுமாதுவும், பன்மைக் கவ்வுமுருபாம்பண்புறுப், பொன்றன்கூட்ட ம்பலவினீட்டந், திரிபினாக்கமாந்தற்கிழமை யும்,பிறிதின்கிழமையும் பேணுதல்பொருளே
ஏழனுருபுகண்ணாதியாகும், பொருண்முத லாறுமோரிருகிழமையி, னிடனாய்நிற்றலிதன் பொருளென்ப. (சச)
கண்கால்கடையிடைதலைவாய்திசைவயின்,

முன்சார்வலமிடமேல்கீழ்புடைமுதல்,பின்பா
டளைதேமுறைவழியுழியுளி, யுள்ளகம்புறமில்
லிடப்பொருளுருபே. (௪௫)

எட்டனுருபேயெய்துபெயரீற்றின், திரிபு
குன்றன்மிகுதலியல்பயற், றிரிபுமாம்பொரு
ள்படர்க்கையோரைத், தன்முகமாகத் தான
ழைப்பதுவே. (௪௬)

இஉஊவோடையோனளரல,யவ்விற்றுயர்
திணையோரவல்லிவற்றொடு, ணஃகானாவீற்று
ப்பொதுப்பெயர்,ஞநவொழியனைத்தீற்றஃறி
ணைவிளிப்பன. (௪௭)

இம்முப்பெயர்க்கண்ணியல்புமேயு, மிகர
நீட்சியுமுருபாமன்னே. (௪௮)

ஐயிறுபொதுப்பெயர்க்காயுமாவு,முருபா
மல்லவற்றுயுமாகும். (௪௯)

ஒருசாரனவ்விற்றுயர்திணைப்பெயர்க்கண்,
ணளபிறழிவயனீட்சியதனொ, டீறுபோதலவ
ற்றொடோவுற,லிறழிந்தோவுறலிறுதியவ்வாத
லதனொடயறிரிந்தேதலிறழிந், தயலேயாத
லும்விளியுருபாகும். (௫௰)

ஏனையுயர்பெயர்க்களபிறழிவய, னீட்சி

யிறுதியவ்வொற்றாத, லயலிலகரமேயாதலும்
விளித்தனு. (ருக)

ரவ்வீற்றுயர்பெயர்க்களபெழவீற்றய. லகரமிஃகுபாதலாண்டையா, வீயாதலதனோடே யுறலீற்றே,மிக்கயல்யாக்கெட்டதனயனீட,லீற்றிலீருறலிவையுமீண்டுருபே. (ருஉ)

லகாரவீற்றுயர்பெயர்க் களபயனீட்சியும், யகாரவீற்றிற்களபுமாமுருபே. (ருங)

னவ்வீற் றுயர்திணை யல்லிருபெயர்க்கண், ணிறுதியழிவத னோடயனீட்சி. (ருச)

லளவீற்றஃறிணைப் பெயர்பொதுப்பெயர்க்கண், ணீற்றயனீட்சியு முருபாகும்மே. (ருரு)

அண்மையினியல்புமீ றழிவுஞ்சேய்மையி, னளபும்புலம்பினோவுமாகும். (ருசா)

நுவ்வொடுவினைச்சுட்டுற்றனளர,வைதுத்தாந்தா னின்னனவிளியா. (ருஎ)

முதலையையுறிற் சினையைக்கண்ணுறு, மதுமுதற்காகிற் சினைக்கையாகும். (ருஅ)

முதலிவைசினையிவை யெனவேறுளவில,வுரைப்போர்குறிப்பினவற்றேபிண்டமும் (ருகூ)

யாதனுருபிற்கூறிற்றாயினும்,பொருள்செ

ன்மருங்கின்வேற்றுமைசாரும். (சாய)

ஐயான்குச்செய்யுட்கவ்வுமாகு, மாகாவஃ றிணைக்கானல்லாதன. (சாக)

எல்லையின்னு மதுவும்பெயர்கொளு, மல் லவினைகொளுநான்கேழிருமையும், புல்லும் பெரும்பாலுமென்மனூர்புலவர். சாஉ)

பெயரியன்முற்றிற்று.

## இரண்டாவது-வினையியல்.

---

செய்பவன்கருவிநிலஞ்செயல்காலஞ், செ ய்பொருளாறுந்தருவதுவினையே. (க)

பொருண்முதலாறினுந்தோற்றி மூன்ற னுள், வினைமுதன்மாத்திரைவிளக்கல்வினைக் குறிப்பே. (உ)

அவைதாம்- முற்றும்பெயர்வினையெச்சமு மாகி,யொன்றற்குரியவும்பொதுவுமாகும்.(ங

பொதுவியல்பாறையுந்தோற்றிப்பொருட் பெயர், முதலறுபெயரலதேற்பிலமுற்றே.(ச

ஒருவன்முதலைந்தையும்படர்க்கையிடத்து, மொருமைப்பன்மையைத் தன்மைமுன்னிலை யினு,முக்காலத்தினுமுரணமுறையே,மூவை

ர்திருமென் றுருட்முற்று, வினைப்பதமொன் றேழுமொன்பானும். (௫)

அன் ஆனிறுமொழியாண்பாற்படர்க்கை. ௬

அள் ஆளிறுமொழிபெண்பாற்படர்க்கை. ௭

அர் ஆர் பவ்வூரகரமாரீற்ற, பல்லோர்படர்க் கைமார்வினை யொடுமுடிமே. (௮)

துறுடுக்குற்றிய லுகரவீற்ற,வொன்றன்பட ர்க்கைடுக்குறிப்பிலுகும். (௯)

அஆவீற்றபலவின்படர்க்கை, ஆவேயெதிர் மறைக்கண்ணதாகும். (௰)

தன்மைமுன்னிலைவியங்கோள்வேறிலை, யு ண்டீரெச்சமிருதிணைப்பொதுவினை. (௰௧)

குடுதுறுவென்னுங் குன்றியலுகரமோ, ட ல்லன்னெனேனாகுமீற்ற,விருதிணைமுக்கூற் றொருமைத்தன்மை. (௰௨)

அம்மாமென்பன முன்னிலையாரையு, மெ ம்மேமோமிவை படர்க்கையாரையு, மும்மூர் கடதறவிருபாலாரையுந், தன்னொடுபடுக்குந் தன்மைப்பன்மை. (௰௩)

செய்கெனொருமையுஞ் செய்குமென்பன் மையும், வினையொடுமுடியினும்விளம்பியமு

ற்றே. (௰௪)

முன்னிலைகூடியபடர்க்கையுமுன்னிலை. ௰௫

ஐயாயிகரவீற்றமூன்று, மேவலின்வருஉ மெல்லாவீற்றவு, முப்பாலொருமைமுன்னி லைமொழியே. (௰௬)

முன்னிலைமுன்னரீயுமேயு, மந்நிலைமரபின் மெய்யூர்ந்துவருமே. (௰௭)

இர்ஈரீற்றவிரண்டுமிருதிணைப், பன்மைமு ன்னிலைமின்னவற்றேவல். (௰௮)

கயவொடுரவ்வாற்றீற்றவியங்கோ,ளிய லு மிடம்பாலெங்குமென்ப. (௰௯)

வேறில்லைபுண்டைம்பான்மூவிடத்தன. உ௰

செய்த செய்கின்ற செய்யுமென்பாட்டிற். காலமுஞ்செயலுந்தோன்றிப்பாலொடு,செய் வதாதியறுபொருட்பெயரு, மெஞ்சநிற்பது பெயரெச்சம்மே. (உக)

செய்யுமெனெச்சவீற்றுயிர்மெய்சேறலு ஞ், செய்யுளுளம்முந்தாதலுமுற்றே, லுயிரு மூயிர்மெய்யுமேகலுமுளவே. (உஉ)

தொழிலுங்காலமுந்தோன்றிப்பால்வினை, யொழியநிற்பதுவினையெச்சம்மே. (உ௩)

செய்து செய்பு செய்யாச்செய்யூச், செய்
தெனச்செயசெயின் செய்யிய செய்யியர்,
வான்பான்பாக்கின வினையெச்சம்பிற, வைந்
தொன்றாறுமுக்காலமுமுறைதரும். (உச)
அவற்றுள், முதலினான்கும் ஈற்றின் மூன்றும்,
வினைமுதல்கொள்ளும்பிறவுமேற்குப்பிற. உரு
சினைவினை சினையொடுமுதலொடுஞ்செறியும்.
சொற்றிரியினும்பொருடிரியாவினைக்குறை
ஆக்கவினைக்குறிப்பாக்கமின்றியலா. (உஅ)
பல்லோர்படர்க்கைமுன்னிலைதன்மையிற்,
செல்லாதாகுஞ்செய்யுமென்முற்றே. (உகூ)
யாரென்வினாவினைக் குறிப்புயர்முப்பால்.
எவனென்வினாவினைக்குறிப்பிழியிருபால்.
வினைமுற்றேவினையெச்சமாகலுங்,குறிப்பு
முற்றீரெச்சமாகலுமுளவே. (ஙல)
வினையியன் முற்றுப்பெற்றது.

மூன்றாவது-இடையியல்.



வேற்றுமைவினைசாரியையொப்புருபுக, டீ
த்தம்பொருளவிசை நிறையசைநிலை,குறிப்பெ
னெண்பகுதியிற் றனித்தியலின்றிப், பெயரி

ஆம்வினையினும் பின்முன்னோரிடத், தொன்றும்பலவும்வந்தொன்றுவதிடைச்சொல். (க)

தெரிநிலைதேற்றமையமுற்றெண்சிறப், பெதிர்மறையெச்சம்வினாவிழைவொழியிசை, பிரிப்புக்கழிவாக்கமின்னனவிடைப்பொருள். (உ)

பிரிநிலைவினாவெண்ணீற்றசைதேற்ற, மிசைநிறையெனவாறேகாரம்மே. (௩)

ஒழியிசை வினாச்சிறப்பெதிர்மறை தெரிநிலை, கழிவசைநிலைபிரிப்பெனவெட்டோவே.

வினைபெயர் குறிப்பிசை யெண்பண்பாறினு, மெனவெனுமொழிவருமென்றுமற்றே.

எதிர்மறை சிறப்பைய மெச்ச முற்றளவை, தெரிநிலையாக்கமோடும்மையெட்டே. (௫)

முற்றும்மையொரோவழியெச்சமுமாகும் செவ்வெண்ணீற்றதாமெச்சவும்மை. (அ)

பெயர்ச்செவ்வெண்ணேயென்றுவெனாவெண், ணான்குந்தொகைபெறுமும்மையென்றென வோ, டிந்நான் கெண்ணுமஃதின்றியுமியலும். (௯)

என்றுமெனவுமொடுவுமொரோவழி, நின்றும்பிரிந்தெண்பொருடொறுநேரும். (௰)

வினையொடுவரினுமெண்ணினைய வேற்பன
விழைவேகாலமொழியிசைதில்லே. (கஉ)
மன்னேயசை நிலையொழியிசையாக்கங், க
ழிவுமிகுதி நிலைபேறுகும். (கங)
வினைமாற்றசை நிலைபிறிதெனுமற்றே. (கச
மற்றையதென்பதுசுட்டியதற்கினம்.(கரு)
கொல்லேயையமசை நிலைக்கூற்றே. (கசு)
ஒடுவுந்தெய்யவுமிசை நிறைமொழியே. கஎ
அந்தில் ஆங்கசை நிலையிடப்பொருளவ்வே.
அம்மவுரையசைகேண்மினென்றாகும்.
மாவென்கிளவிவியங்கோளசைச்சொல்.
மியாயிகமோமதியத்தையித்தை, வாழிய
மாளவியாழமுன்னிலையசை. (உக)
யாகாபிறபிறக்கரோபோமாதிகுரந், சின்கு
ரையோரும் போலுமிருந்திட், டன்றுந்தா ந்
தான்கின்று நின்றசைமொழி. (உஉ)

இடையியன்முற்றிற்று.

## நான்காவது-உரியியல்.

பல்வகைப்பண்டும்பகர்பெயராகி, யொரு
குணம்பலகுணர் தழுவிப்பெயர்வினை, யொ
ருவாசெய்யுட்குரியனவுரிச்சொல். (க)

உயிருயிரல்லதாம்பொருட்குணம்ப ண்பெ. (உ)
மெய்நாமூக்குநாட்டஞ்செவிகளி, னொன் றுமுதலாக்கீழ்க்கொண்டமேலுணர்தலி, னொ ரறிவாதியாவுயிரைந்தாகும். (௩)
புன்மரமுதலவுற்றறியுமோரறிவுயிர். (௪)
முரணந்தாதிநாவறிவொடீரறிவுயிர். (௫)
சிதலெறும்பாதிமூக்கறிவின்மூவறிவுயிர்.
தும்பிவண்டாதிகண்ணறிவினாலறிவுயிர்.(எ
வானவர்மக்கணரகர்விலங்குபுள், ளாதிசெ வியறிவோடையறிவுயிரே. (அ)
உணர்வியலாமுயிரொன்றுமொழித்த, வு டன்முதலனைத்துமுயிரல்பொருளே. (கூ)
ஒற்றுமைநயத்தினொன்றெனத்தோன்றினு ம், வேற்றுமைநயத்தின்வேறேயுடலுயிர்.(௰)
அறிவருளாசையச்சமான, நிறைபொறை யோர்ப்புக்கடைப்பிடிமைய, னினைவுவெறுப் புவப்பிரக்கநாண்வெகுளி, துணிவழுக்காறன் பெளிமையெய்த்த, றுன்பமின்பமிளமைமூ ப்பிகல், வென்றிபொச்சாப்பூக்கமறமத, மற வியினையவுடல்கொளுயிர்க்குணம். (௰௧)
துய்த்தலுறங்கன் முதலனித, லுய்த்தலாதி

யுடலுயிர்த்தொழிற்குணம். (௰௨)

பல்வகைவடிவிருநாற்றமைவண்ண, மறுசு
வையூறெட்டுயிரல்பொருட்குணம். (௰௩)

தோன்றன்மறைதல்வளர்தல்சுருங்க, னீங்க
லடைதனடுங்கலிசைத்த, லீதலின்னனவிரு
பொருட்டொழிற்குணம். (௰௪)

சாலவுறுதவநனிகூர்கழிமிகல். (௰௫)

கடியென்கிளவிகாப்பேகூர்மை, விரையே
விளக்கமச்சஞ்சிறப்பே, விரைவேமிகுதிபுது
மையார்த்தல், வரைவேமன்றல்கரிப்பிறுகும்.

மாற்றநுவற்சிசெப்புரைகரைநொடி, யி
சைகூற்றுப்புகறன்மொழிகிளவிவிளம்பறை,
பாட்டுப்பகர்ச்சியியம்பல்சொல்லே. (௰௭)

முழக்கிரட்டொலிகலியிசைதுவைபிளிறி
ரை, யிரக்கழுங்கியம்பலிமிழ்குளிறதிர்குரை,
கனைசிலைசும்மைகௌவைகம்பலை,யரவமார்ப்
போடின்னனவோசை. (௰௮)

இன்னதின்னுழியின்னணமியலு, மென்றி
சைநூலுட்குணகுணிப்பெயர்கள், சொல்லா
ம்பரத்தலிற்பிங்கலமுதலா,நல்லோருரிச்சொ
லினயந்தனர்கொளலே. (௰௯)

உரியியன்முற்றுப்பெற்றது.

இருதிணையாண்பெண்ணு ளொன்றனையொழிக்கும், பெயரும்வினையுங்குறிப்பினானே. (க)

பெயர்வினையிடத்து னளரயவீற்றய, லாவோவாகலுஞ்செய்யுளுளுரித்தே. (உ)

உருபும்வினையுமெதிர் மறுத்துரைப்பினுந், திரியாதத்தமீற்றுருபினென்ப. (ஙு)

உருபுபலவடுக்கினும் வினை வேறடுக்கினு, மொருதம்மெச்சமீறுறமுடியும். (ச)

உருபுமுற்றீரொச்சங்கொள்ளும், பெயர்வினையிடைப்பிறவரலுமாமேற்பன. (ரு)

எச்சப்பெயர்வினையெய்துமீற்றினும். (சா)

ஒருமொழியொழிதன் னினங்கொளற்குரித்தே. (எ)

பொதுப்பெயர்வினைகளின்பொதுமைநீக்கு,மேல்வருஞ்சிறப்புப்பெயர்வினைதாமே. அ

பெயர்வினையும்மைசொற்பிரிப்பெனவொழியிசை, யெதிர்மறையிசையெனுஞ்சொல்லொழியொன்பதுங், குறிப்புந்தத்தமெச்சங்கொள்ளும். (கூ)

பெயரொடுபெயரும்வினையும்வேற்றுமை,முதலியபொருளினவற்றினுருபிடை,யொழியவிரண்டுமுதலாத்தொடர்ந்தொரு, மொழிபோ

னடப்பனதொகைநிலைத்தொடர்ச்சொல். (௰)
வேற்றுமைவினைபண்புவமையும்மை, யன்
மொழியெனவத் தொகையாறாகும். (௰௧)
இரண்டுமுதலாமிடையாறுருபும், வெளிப்
படவில்லது வேற்றுமைத்தொகையே. (௰௨)
காலங்கரந்தபெயரெச்சம்வினைத்தொகை.
பண்பைவிளக்குமொழிதொக்கனவு, மொ
ருபொருட்கிருபெயர்வந்தவுங்குணத்தொகை
உவமவுருபில துவமத்தொகையே. (௰௫)
போலப்புரையவொப்பவுறழ, மானக்கடுப்
பவியையவேய்ப்ப, நேரநிகரவன்னவின்ன,
வென்பவும்பிறவுமுவமத்துருபே. (௰௬)
எண்ணலெடுத்தன்முகத்தனீட்ட, லெனுநா
ன்களவையுளும்மிலதத்தொகை. (௰௭)
ஐந்தொகைமொழிமேற் பிறதொகலன்
மொழி. (௰௮)
முன்மொழிபின்மொழிபன்மொழிபுற
மொழி, யெனுநான்கிடத்துஞ்சிறக்குந்தொ
கைப்பொருள். (௰௯)
வல்லொற்றுவரினேயிடத்தொகையாகு, மெ
ல்லொற்றுவரினே பெயர்த்தொகை யாகும்.
உயர்திணையும்மைத்தொகையலரீறே. (௨௧)

தொக்குழிமயங்குநவிரண்டுமுதலே, யெல்
லைப்பொருளின்மயங்குமென்ப. (உஉ)

முற்றீரெச்சமெழுவாய்விளிப்பொரு, ளா
றுருபிடையுரியடுக்கிவைதொகாநிலை. (உ௩)

திணையேபாலிடம்பொழுதுவினாவிறை, ம
ரபாமேழுமயங்கினும்வழுவே. (உ௪)

ஐயந்திணைபாலவ்வப்பொதுவினு, மெய்
தெரிபொருண்மேலன்மையும்விளம்புப. (உ௫)

உயர்திணைதொடர்ந்தபொருண்முதலாறு,
மதனொடுசார்த்தினத்திணைமுடிபின. (உ௬)

திணைபால்பொருள்பலவிரவினசிறப்பினு,
மிகவினுமிழிபினுமொருமுடிபினவே. (உ௭)

உவப்பினுமுயர்வினுஞ்சிறப்பினுஞ்செறவி
னு,மிழிப்பினும்பாற்றிணையிழுக்கினுமியல்பே.

ஒருமையிற்பன்மையும்பன்மையினொரு
மையு, மோரிடம்பிறவிடந்தழுவலுமுளவே.

தரல்வரல்கொடைசெலல்சாரும்படர்க்கை,
யெழுவாயிரண்டுமெஞ்சியவேற்கும். (௩௰)

இறப்பெதிர்வுநிகழ்வெனக்காலமூன்றே. ௩௧

முக்காலத்தினுமொத்தியல்பொருளைச்,
செப்புவர்நிகழுங்காலத்தானே. (௩௨)

வினாவினுமிகவினுந்தெளிவினுமியல்பி

னும், பிறழவும் பெறூஉ முக்காலமுமேற்புழி.

அறிவறியாமையை யுறல்கொளல்கொடை, யேவறரும்வினாவாறுமிழுக்கார். (௩௪)

சுட்டுமறைநேரேவல்வினாத, லுற்றதுரைத் தலுறுவதுகூற, லினமொழியெனு மெண்ணிறை யுளிறுதி, நிலவிய வைந்தும் பொருண் மையினேர்ப. (௩௫)

வினாவினுஞ்செப்பினும் விரவாசினைமுதல்.

எப்பொருளெச் சொலி னெவ்வா றுயர்ந் தோர், செப்பின ரப்படிச் செப்புதன் மரபே.

வேறுவினைப்பல் பொருடழுவிய பொதுச் சொலும், வேறவற்றெண்ணு மோர்பொது வினைவேண்டும். (௩௮)

வினைசார் பினமிட மேவிவிளங்காப், பல பொருளொருசொற்பணிப்பர்சிறப்பெடுத்தே

எழுத்தியறிரியாப்பொருடிரிபுணர்மொழி, யிசைத்திரிபாற்றெளிவெய் துமென்ப. (௪௰)

ஒருபொருண் மேற்பல பெயர் வரினிறுதி, யொருவினைகொடுப்பதனியுமொரோவழி.

திணைநிலஞ்சாதிகுடியேயுடைமை, குணந் தொழில்கல்விசிறப்பாம்பெயரொ, டியற்பெ யரேற்றிடிற்பின்வரல்சிறப்பே. (௪௨)

படர்க்கைமுப் பெயரோடணையிற்சுட்டுப், பெயர்பின் வரும்வினை யெனிற் பெயர்க்கெங்கு,மருவும்வழக்கிடைசெய்யுட்கேற்புழி. (௪௩)

அசைநிலைபொருணிலையிசைநிறைக்கொருசொல், லிரண்டுமூன்று நான்கெல்லைமுறையடுக்கும். (௪௪)

இரட்டைக்கிளவியிரட்டிற்பிரிந்திசையா.
ஒருபொருட் பல்பெயர் பிரிவிலவரையார்.
ஒருபொருட்பன்மொழி சிறப்பினின் வழா.
இனத்தென்றறி பொருளுலகினிலாப்பொருள், வினைப்படுத் துரைப்பி னுமைமவேண்டும். (௪அ)

செயப்படுபொருளைச் செய்தது போலத், தொழிற்படக்கிளத்தலும்வழக்கினுரித்தே.
பொருண் முதலாறுமடைசேர்மொழியின, முள்ளவுமில்லவுமாமிருவழக்கினும். (௫௰)

அடைமொழியினமல்லதுந்தருமாண்டுறின். (௫௧)

அடைசினைமுதன் முறையடைதலுமீரடை, முதலோடாதலும் வழக்கியலீரடை, சினையொடுசெறிதலுமயங்கலுஞ்செய்யுட்கே. (௫௨)

இயற்கைப்பொருளை யிற்றெனக்கிளத்தல்.

காரணமுதலாவாக்கம்பெற்றுங், காரணமி ன்றியாக்கம்பெற்று, மாக்கமின்றிக்காரணம டுத்து, மிருமையுமின்றியு மியலுஞ்செயும் பொருள். (௫௪)

தம்பாலில்லதில்லெனினினனா, யுள்ளதுகூ றியுமாற்றியுமுள்ளது, சுட்டியுமுரைப்பர்சொ ற்சுருங்குதற்கே. (௫௫)

ஈதாகொடுவெனுமூன்றுமுறையே, யிழிந் தோனொப்போன் மிக்கோனிரப்புரை. (௫௬)

முன்னத்தினுணருங்கிளவியுமுளவே. (௫௭)

கேட்குநபோலவுங்கிளக்குநபோலவு, மி யங்குநபோலவுமியற்றுநபோலவு, மஃறிணை மருங்கினுமறையப்படுமே. (௫௮)

உருவகவுவமையிற்றிணைசினைமுதல்கள், பிற ழ்தலும்பிறவும்பேணினர்கொளலே. (௫௯)

யாற்றுநீர்மொழிமாற்று நிரனிறைவிற்பூ ண், டாப்பிசையளைமறிபாப்புக்கொண்டுகூட், டடிமறிமாற்றெனப் பொருள்கோளெட்டே.

மற்றையநோக்கா தடிதொறும்வான்பொ ரு, ளற்றற்றொழுகுமஃதியாற்றுப்புனலே.

ஏற்றபொருளுக்கியையு,மொழிகளை,மாற்றி யோரடியுள்வழங்கன் மொழிமாற்றே. (௬௨)

பெயரும்வினையுமாஞ்சொல்லையும்பொருளையும், வேறுநிரனிறீஇ முறையினுமெதிரினு, நேரும்பொருள்கோ ணிரனிறை நெறியே. (௬௩)

எழுவாயிறுதிநிலைமொழிதம்முட், பொருணோக்குடையது பூட்டுவில்லாகும். (௬௪)

இடைநிலைமொழியேயேனையீரிடத்து, நடந்துபொருளை நண்ணுதறாப்பிசை. (௬௫)

செய்யுளிறுதிமொழியிடைமுதலினு, மெய்தியபொருள்கோளளைமறிபாப்பே. (௬௬)

யாப்படிபலவினுங் கோப்புடைமொழிகளை, யேற்புழியிசைப்பது கொண்டுகூட்டே.

ஏற்புழியெடுத்துடன் கூட்டுறுமடியவும், யாப்பீறிடைமுதலாக்கினும்பொருளிசை, மாட்சியுமாறாவடியவுமடிமறி. (௬௮)

சொற்றொறுமிற்றிதன்பெற்றியென்றனைத்து, முற்றமொழிகுறின் முடிவிலவாதலிற், சொற்றவற்றியலான்மற்றையபிறவுந், தெற்றெனவுணர்தறெள்ளியோர்திறனே. (௬௯)

பழையனகழிதலும்புதியனபுகுதலும், வழுவலகாலவகையினானே. (௭௦)

பொதுவியன்முற்றுப்பெற்றது.

இரண்டாவது-சொல்லதிகாரமுற்றிற்று.